[12th February 1958

*Lignite.*

* 70 *Q*.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state the quantity of lignite excavated so far from the mines in Neyveli?

THE HON. SRI R. VENKATARAMAN : Lignite has not been excavated so far from the mines at Neyveli. The work on the removal of the overburden is in progress.

SRI N. K. PALANISAMI : *எற்கெனவே திட்டம் போட்டதுமாதிரி, அங்கு இருக்கக்கூடிய நிலக்கரியை எடுக்க முடியாததற்குக் காரணம், அதிகப்படியாக தண்ணீர் வருவதை கட்டுப்படுத்தமுடியாத காரணத்தினால் சர்க்கார் போட்டிருக்கக்கூடிய திட்டம் நிறைவேறுமா ?*

THE HON. SRI R. VENKATARAMAN : *நிபுணர்கள் நிறைவேறும் என்று சொல்லுகிறார்கள். ஆனால் பழனிஸ்வாமி என்ன நினைகிறாரோ தெரியாது.*

* SRI M. P. SUBRAMANIAM : *நெய்வேலி சுரங்க வேலையைப் பொறுத்தளவில் அதை பெரிய அளவில் செய்வதற்கு வெளி நாடுகளிலிருந்து பெரிய பெரிய இயந்திரங்கள் வரவழைக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அது எப்பொழுது நிறைவேறும் ? இப்பொழுது இருக்கக்கூடிய அன்னிய செலாவணியால் அது தாமதிக்கப்படுமா ?*

THE HON. SRI R. VENKATARAMAN : *நெய்வேலித் திட்டத்திற்கு வேண்டிய அன்னிய செலாவணி ஒதுக்கப்பட்டிருப்பதாக முன்பே அறிக்கைகள் எல்லாம் வந்துவிட்டன. நமக்கு வேண்டிய இயந்திரங்கள் எல்லாம் இப்பொழுது வந்துகொண்டிருக்கிறது. சில வந்தும் விட்டன. சில பின்பு வருகிறது. ஆகவே இது தாமதிக்கப்படாது.*

SRI M. P. SUBRAMANIAM : *அங்கு தண்ணீரை எடுத்து மேலே கொட்டுவதற்கு வேண்டிய இயந்திரங்கள் அமெரிக்காவிலிருந்து வருகிறது என்று சொன்னார்கள். அவைகள் வந்துவிட்டனவா ?*

THE HON. SRI R. VENKATARAMAN : *வந்த சில இயந்திரங்கள் அங்கு எடுத்துக்கொண்டு செல்லப்படுகிறது.*

*Polytechnic at Gudiyattam.*

* 71 *Q*.—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the progress made in the matter of starting a Polytechnic at Gudiyattam, North Arcot district; and

(*b*) when it is expected to start functioning?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) There is no proposal to start a Polytechnic at Gudiyattam.

(*b*) The question does not arise.

SRI T. KARIA GOUNDER : *பத்திரிகைகளில் பார்த்தோம், இரண்டரை லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள் என்று. பத்திரிகைகளில் வந்திருப்பதால்தான் அதைப்பற்றி நண்பர் கேட்டிருக்கிறார்கள். ராஜகோபால் நாயுடு அவர்கள் ஒரு டிரஸ்ட் வைத்திருப்பதாகவும், அதை பாலிடெக்னிக்குக்காக ஒதுக்கியிருப்பதாகவும் சொல்வது சர்க்காருக்குத் தெரியுமா ? மேலும் இந்த வருடத்தில் யாராவது பணம் கொடுப்பதற்கு வந்தால் பாலிடெக்னிக் பள்ளிக்கூடம் அமைக்கப்படுமா ?*